சிவமயம்

# குமரகுருபரன்




மலர் 15] 1964-ஞு கார்த்திகை மீ 1 ௳ 16-11-64 [இதழ் 11

தனிப் பிரதி 13 நயா பைசா வருடச் சந்தா ரூ 1½

## ஆசிரியர் குழு

1. வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்
ஸ்ரீ காசிமடம் இளவரசு, திருப்பனந்தாள்.
2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை. காசி.
3. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.
4. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர்
அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்
கல்லூரி, திருநெல்வேலி.
5. திரு. ஆ. சி. ஷண்முகநயினர் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர். தென்காசி.
6. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா.
20. நுங்கம்பாக்கம் ஹைரோடு. சென்னை-6
7. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

---

**T. M. குமாரகுருபரன் பிள்ளை B. A., B. L.,**
**நிர்வாக ஆசிரியர்.**

## உள்ளுறை

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# விலை மலிவு அறிவிப்பு

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த

# திருவாசகம்

(எட்டாம் திருமுறை)

சுவாமிகள் வரலாற்றுடன், 224 பக்கங்கள் கொண்டது. உயர்ந்த ரக வெள்ளைத்தாளில் தெளிவாக அச்சிடப் பெற்றது. குரோதி வருஷம் மார்கழித் திருவாதிரையை முன்னிட்டு நாளது மார்கழி மாதம் திருவாதிரை வரையிலும் **திருவாசகம்** பிரதி ஒன்றுக்கு **40** ந. பைசாவாக விலை குறைக்கப்பட்டிருக்கிறது. இது திருமுறை நண்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு.

கிடைக்குமிடம்

**ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில்**

ஸ்ரீவைகுண்டம், திருநெல்வேலி ஜில்லா.

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 15 || குரோதி-ஹூ கார்த்திகை திங்கள் 1-ம்வ [16-11-64] || இதழ் 11

# தில்லைச் சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை

## (கட்டுரை 7)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்

**சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,

காஞ்சிபுரம்.



அனைத்துலகும் ஈன்ற தாய், சிவபிரானைத் தழுவுங்காரணத்தால்தான் எல்லா வுயிர்களும் போகத்தை அடைகின்றன. "போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்" "ஊகியா மூடர்". இது தமிழ்ச் சிவாகமவசனம். நம் இறைவனும் இறைவியும் தழுவாது ஒரு விநாடிநிற்பினும், அப் பொழுது எவ் வுயிரும் போகியாகாமல் யோகியாயே நிற்கும். அவ்வுண்மையைக் கொண்டு இப்பாடல் எழுந்தது. இதிற் குமரகுருபர முனிவரர் சிறந்த நயம் பொருந்த அதனைப் புலப்படுத்தியருளினர்.

சிவபிரான் மேருமலையை வில்லாக வளைத்தவர். வளைத்த போது கையால் அதை வளைத்தாரே அன்றி வேறு உறுப்பால் அன்று. அது திறமையைக் காட்டுவதாகாது. வளைக்குங் கருவி கையே. அக்கருவியைக் கொண்டு செய்வதில் என்ன வியப்பு இருக்கின்றது. மலையை வளைத்தது மட்டும் வியப்புத்தான். அதை வியப்பன்று என்னத் தட்டில்லை. அவ்வியப்பும் ஒரே மலையை வளைத்த அளவில் நின்றது. ஒரே சமயத்தில் ஒரு மலைக்கு எட்டு மலையை வளைத்த வியப்பு நம் தாயார்க்கு உண்டு. அம் மலைகள் எம்மலைகள்? நம் அப்பனுடைய திருத் தோள் களாகிய செம்மலைகள். நம் தாய் சிவபிரானுடைய திருமேனியைத் தொட்டு அவன் தோள்களைக் கட்டித் தழுவுங்கால் அவைஎட்டும் குழைந்தன. சிறிதேனும் வளையாமற் குழைவது இல்லை. அதனால் வளைதலையும் குழைதலையும் அபேதமாகச் சொல்லும்படி பாவ லர்க்குத் துணிவுண்டாய் வருகிறது. சிவபிரான் மேருமலையைக் குழைத்தது செங்கையால். நம் தாய் சிவபிரான் தோள்மலையைக் குழைத்தது கொங்கையால். செங்கையும் இரண்டே. கொங்கை யும் இரண்டே. குழைக்குங்கருவி இவ்விரண்டே, குழைந்த மலை களோ எண்ணில் ஒன்றுபடவில்லை. அப்பன் குழைத்த மலை ஒன்றுதான். அம்மை குழைத்த மலைகளோ எட்டு. ஒரு மலையைத்தான் செங்கை வளைத்துக் குழைத்தன. எட்டு மலை களைக் கொங்கை வளைத்துக் குழைத்தன. உரிய கருவியால் வேலை நிகழ்வதில் என்ன வியப்பு? கொங்கை மலைகளை வளைத்துக் குழைக்கும் கருவியல்ல. அவற்றால் ஒரு மலைக்கு எட்டு மலைகளைக் குழைப்பது அளவிலாத வியப்புக்கு உரியது அன்றோ?தோள்மட் டும் குழைவதாகத் தோற்றுவதன்று.உள்ளக்குழைவையேதோற் றுவது இது. உறுப்புக்குழைவு வாயிலாக உள்ளக் குழைவை நிகழ்த்துவதே இயல்பு. இதனை உளத்திற்கொண்டு இப்பாடலைக் கற்றுணர்க. 'கண்ணுதலார் கனக வெற்பைச் செங்கை கொண்டே குழைத்தார். சிவகாமி! அவர் புயக்குன்று எட்டுமே நின் கொங்கை கொண்டே குழைத்தாய்' என்பதை மட்டும் இப் பாடலில் முதலில் அறிவது நல்லது. அதன்பின்னர், கண்ணுத லார் செயல் ஆகச் சொல்லிய இரண்டனையும் அறியலாம். காதலன் தன் காதலியின் சினத்தைத் தவிர்க்கக் கால்வருடிக் களிப்பித்தலும், காதலி, தன் காதலன் கால்வருடித் துயில்

வித்தலும் உலகியல். காதலி தன் காதலன் காலில் விழுந்து வேண்டிக் கொண்டு காமக் கருத்தை நிறைவேற்றுதல் உலகியல் பன்று. இது:–

“அங்கைகொண் டேநின் னடிதைவந் தாரழ லாறமுடிக்
கங்கைகொண் டாட்டும்நம் கண்ணுத லார்அக் கனகவெற்பைச்
செங்கைகொண் டேகுழைத் தார்;சிவ காமி!நின் சித்திரமென்
கொங்கைகொண் டேகுழைத் தாய்;அவர் பொற்புயக்
குன்றெட்டுமே.”

கைந் நகம்படக் கால் வருடுவதும் உள்ளங்கையால் மட்டும் காலை ஒற்றி வருடுவதும் பலர்க்கு அநுபவம். அவற்றுள், பின்னதே உள்ளக்குழைவை மிகுக்கும். அக்குழைவையும் சிவன் சிவைக்குச் செய்தக்கால், செங்கையே கருவியாயின. தாயடியைத் தடவிக் குழைத்ததும் கையே. அடிதடவித் தன் உள்ளத்தைக் குழைத்தவனுக்குக் கொங்கை முடிதடவச் செய்து, அவன் உள்ளக் குழைவைச் செய்த அம்பிகையின் வீறு புலனுகும். ஆடவர், மகளிரை மகிழ்விக்க அடிதொட்டுப் பணிவதும், மகளிர் ஆடவரை அகங்களிப்பிக்க அடி தொட வேண்டாத முடிநிமிர் செருக்கும் இதனுல் குறிப்பித்தவாருகும். காதலியின் சினக்கனல் அவியக், காதலன், அவள் அடியைத் தன் முடிதொடப் பணிதல் வேண்டும். அவ்வாறு, சிவகாமியின் ஊடல் பற்றிய சினம் ஆகிய ஆரழல் (அவித்தற்கு அரிய நெருப்பு; அருமையழல்-ஆரழல்) தில்லையாடியின் முடியில் உள்ள கங்கை தோய்ந்ததால் அவிந்தது. காலில் விழுந்து வணங்கிக் காதலியின் சினத்தை (ஊடலை)த் தவிர்த்துக் கொள்ளச் செய்த முயற்சி அவனுக்கு மிக்க அநுகூலமாயிற்று. அடிவிழுந்த போது முடியில் இருந்த கங்கை, அகத்தின் அழலை மிகுசுகத்தின் அவிக்கும் சுவபாவ சாதநம் ஆய்விட்டது. தன் முயற்சியில் லாமலேயே இந் நன் முயற்சி வாய்த்தது சிவனுக்கு. இதனை ‘ஆரழல் ஆற முடிக் கங்கை கொண்டு ஆட்டும் கண்ணுதலார்’ என்று அவன்முயற்சியாகவே ஆசிரியர் கூறினர். அடிதைவந்தது அவன் முயற்சியாதல் போல முடிதாழ்த்தி அடி வணங்கியதும் அவன் முயற்சியே. முடி சாய்ந்த போது முடியில் இருந்த கங்கையும் சாய்ந்தது. கங்கையளவு பெருநீர் காலிற்பட்டுக் கருத்திலிருந்த

கனலைக் குளிர்வித்தது ஆயின், காமத்தால் உண்டான ஊடற் சினம் சிறிதளவு நீரால் ஆறுவதன்று என்பது தெரிகின்றது. அழலும் ஆரழல். அதைத்தணிப்பதும் கங்கை. இரண்டும் பெரியன. அதைத் தணிக்க அக்கங்கையைச் சாதனமாகக் கொள்ளும் ஆற்றல் எல்லார்க்கும் உண்டாமோ? நெருப்பைத் தணிக்க நீர் தேவைதான். சிறு நெருப்பைப் பெருநெருப்பு அவிக்காதோ? இக்கேள்வி பொருந்தாது. அவ்விரு நெருப்பும் ஒரு நெருப்பாகிப் பெருநெருப்பாய் விடும். கோபத்தைக் கோபத் தால் தணிப்பவர் எவரும் இலர். இருவர் கோபமும் போர்வளர்க் கும் அன்றிச் சமாதானத்தை விளைக்கமாட்டா. நெற்றிக்கண் ணெருப்பைக் கொண்டு அம்பிகையின் காமக் கண்ணெருப்பை அடக்க முடியுமா கடவுளாயினும் தனக்கு? அது முடியாது. அது முடியாதென்று எண்ணித்தான், நீரால் நெருப்பவியும் உண்மையைத் தோற்றியவனுன தானே அதை(த் தன் செய்கை யாலும்) நிகழ்த்திக் காட்டினுன். நெற்றிக்கண்ணனுனுலும் நெருப்பை நீரால் தான் அவியச் செய்யக்கடவன். தன் கண் ணெருப்பால் அவ்வுண்ணெருப்பை அவிக்க அந்நெற்றிக் கண்ணனுக்கும் ஆற்றல் இல்லை. இதை அறிவிக்கவே 'நம் கண்ணுதலார்' என்று குறித்தார். 'அக்கனக வெற்பு' என்ற சுட்டு அவ்வெற்பின் பிரசித்தியைக் குறித்தது. அவர் பொற் புயக்குன்று என்ற சுட்டு அம்பிகைக்கு அவற்றைக் குழைவித் தல் அருமையாகாத அலட்சியத்தைக் குறித்தது. அலட்சிய மாகப் பேசும்போது, 'அவன் கிடக்கின்ருன்,போ' என்பது உலகியல். 'கொண்டே' என்னும் இரண்டற்கும், சிறிது வேறு பாடு உண்டு. குழைத்தற்குரிய கருவியுறுப்பாகிய செங்கையைக் கொண்டே என்றும் வளைத்தற்குரிய உறுப்புக் கருவியல்லாத கொங்கையைக் கொண்டே என்றும் கருதச் செய்த தால் அவ் வேறுபாடு புலனுகும். ஆகவே செங்கைக் கோள் ஆற்றல் வேறின்மையையும், கொங்கைக் கோள் எதை யும் எதனுலும் செய்து முடிக்கும் ஆற்றலுடைமையையும் குறித்தவாறுணர்க. 'செங்கை கொண்டே' என்றதில் பிரிக்கப் பட்டன கையல்லாத பிறவுறுப்புக்கள். 'கொங்கை கொண்டே' என்றதில் கொள்ளப்பட்டவை கொங்கையே செங்கையல்ல என்று தேற்று மாறறிக. இங்கு ஏகாரம் பிரிநிலையும் தேற்றமும்

ஆகிய இரண்டனையும் குறிக்கும். மாதவச் சிவஞானமுனிவர் சிவஞானபோதச் சிற்றுரையில் முதற்சூத்திரப் பொருள் விளக்கத்தில், 'தோற்றியதிதியே' என்றதில் உள்ள "ஏகாரம் இயைபின்மை நீக்குதற்கும் பிறிதின் இயைபு நீக்குதற்கும் பொதுவாய் நின்ற பிரிநிலை" என்று வடமொழியில் ஏவகாரத்திற்குச் சொல்லும் பொருளைக் குறித்துத் தமிழில் கூறும் பிரிநிலையொடு பொருத்தியுணர்த்தியருளினர். மாபாடியத்திலே விசேடண விசேடியம் குறித்த வடமொழி வழக்கும் தமிழில் பிறவற்றினின்றும் பிரித்துணர்த்தும் ஏகாரப் பொருள் வழக்கும் அம் முனிவர் பிரானுரால் ஒன்று படுத்தி உணர்த்தப்பட்டன. அவர்க்குள்ள ஆற்றல் எங்கே? நம் ஆற்றல் எங்கே! மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடன்றோ? அஜகஜாந்தரமும் ஆகும். "இரு செவியன்" என்பதை இரண்டுமுறம் போலும் செவியன் என்று விரிக்கும் ஆற்றல் பிறர்க்கு உண்டோ? 'ஐம்பாலறியும் பண்பு தொகு மொழி' என்ற தொல்காப்பியர்க்கும் கிடைக்காத ஆற்றல் அது. அத்திறத்தில் மட்டும் நம் பெருமானை வியப்பது போதுமோ? சிவஞான போதத்திலும் சிவஞான சித்தியாரிலும் இலக்கண நூலான பாயிரவிருத்தி முதற் சூத்திர விருத்தியிலும் அத்யற்புத விஷயங்கள் உரையில் எழுதியருளினர்கள்.அவற்றை அறிந்து வியப்பார் இக்காலத்தரியர்.

சிவபிரான் செங்கை கொண்டு புவிப்பொன் மலையைக் குழைத்ததும் சிவகாமியம்மை கொங்கை கொண்டு அவன் புயப் பொன் மலையைக் குழைத்ததும் வியப்பல்ல. குமரகுருபரர் இப் படிப் பாடியதும் நாம் இதன் பொருளை இப்படி யெழுதியதும் தகுமோ? துறவிகள் இப்படிப் பொருளாழம் இத்திறத்தில் காணலாமா? இவ்வாறு இதைக் கற்பாருட் பலர் நினைப்பதும் வியப்பாகாது.

(தொடரும்)



# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 15. இதழ் 10-ன் தொடர்ச்சி

## Do's and Dont's in Yoga

### யோக நெறியில் கொள்வதும் விலக்குவதும்

45. பேணிற் பிறவா வுலகருள் செய்திடும்;
காணிற் றனது கலவியுளே நிற்கும்;
நாணின் நரக நெறிக்கே வழிசெயும்;
ஊனிற் சுடுமங்கி உத்தமன் றனே.

Do with care practise yoga
Thou shalt with Immortals be;
Within thee shalt thou glimpse Him;
If thou but waver,
Then Shalt thou react the world of Darkness
Verily, the Kundalini Fire that yoga kindles in thee
Is the Gracious Lord - Him Self be.

யோக நெறியை முறையாகப் பயின்றால், பின்னைப் பிறவா முத்தி நிலை எய்தலாம்; சிவனைச் சிவனிலே காணலாம்; உடலத்துள்ளே உறையும் குண்டலினி சக்தியே இறைவனுவான். அந்த யோக நெறியில் அஞ்சித்தவறினால், எஞ்சுவது நரகத்துன்பமே.

வரி 2. கல்வி – கலந்து நிற்றல்
3. அங்கி – குண்டலினி சக்தி.

## Fall and Redemption through Yoga

## யோகத்தால் தாழ்ந்தவரும் வாழ்ந்தவரும்

46. ஒத்த செங்கோலார், உலப்பிலி மாதவர்
எத்தனை யாயிரம் வீழ்ந்தனர்! எண்ணிலி
சித்தர்கள், தேவர்கள், மூவர், பெருமையாய்
அத்த னிவனென்றே அன்புறு வார்களே.

The monarchs that swayed the sceptre righteous,
The devout anchroites in unnumbered thousands,
How many, howmany,–thy fell below
(For having wavered in yoga practice)
And yet, the myriad Siddhas, Devas and the supreme Beings Three,
All redeemed adoreth Him
Saying "Thou Our Father!"

செங்கோல் நெறிதவரு மன்னர்கள், எண்ணற்ற தவ முனிவர் ஆகியோர் எத்தனை ஆயிரமவரோ (யோக நெறியில் அஞ்சித்தவறி) வீழ்ந்தனர்! ஆயினும் எண்ணற்ற சித்தர்கள், தேவர்கள், மூவர்கள் யோக நெறியில் வென்று உய்ந்து, "இவனே எந்தை" என்று வணங்கி அன்பு செலுத்துகின்றனர்.

(தொடரும்)



# கருணை மலர்ப்பதம்

திரு. பொ. முத்தரசு அவர்கள், M. A., B. T.,
தமிழ்த்துறைத் தலைவர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கல்லூரி,
அருள்நந்திநகர் – ஸ்ரீவைகுண்டம்.



பண்டைத் தமிழ் இலக்கியங்களுள் அகப்பொருள் பற்றி யனவே பெரும்பாலன. பழந்தமிழ் அறிஞர் வாழ்க்கைக்கு நன்மையும் உயிர்க்கு உறுதியும் தருவனவற்றையே இலக்கியங் களுக்குரிய பொருளாகக் கொண்டனர். பாழும் மனக்குரங்கின் ஆட்டத்தைத் தவிர்த்து அதனைப் பண்புடையதாக ஆக்குதற்கு ஏற்ற பயிற்சிக் களம் வாழ்க்கையே. அதிலும் அகவாழ்க்கையே ஒருவன் புறவாழ்க்கைக்கும், உயிர் வளர்ச்சிக்கும், பண்பாட்டுக் கும்அடிப்படையாக இலங்குவது. எனவே தமிழில் அகப்பொருள் இலக்கியங்கள் மிகுந்திருப்பதன் காரணம் இனிது விளங்கும். உலகியல் அடிப்படையில், வாழ்வில் காணப்படும் குறைகளைப் போக்கி உயர்நெறிச் செலுத்துவதற்காக ஓரளவு கற்பனையும் கலந்து "இல்லது, இனியது, நல்லது" என்று உயர்ந்தோரால் நாட் டப் படுவது இலக்கியம்.

## திருக்கோவையார் :

அவற்றுள்ளும் உலகியற் கூறுகளை மேற்போக்காகக் கொண்டு, அருளியல் கூறுகளை உட்பொருளாக அமைத்து மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிச் செய்தது திருச் சிற்றம்பலக்கோவையார். எம்பெருமான் ஆணைப்படி பாடப் பெற்று, அவன் திருக்கையால் எழுதப்பெற்ற சிறப்பும் இவ் வருள் நூலுக்குரியது. இதன்கண் அமைந்துள்ள இருபத்தைந்து கிளவிக் கொத்துக்களின் விரிவாகிய நானூறு துறைகளுள் ஒரு

நூறு துறைகளுக்கு விளக்கம் தந்தும் ஆலவாய்ப் பெருமானின் அருட்புகழை இடைமிடைந்தும், கல்லாடனாரால் பாடப்பெற்ற நூல் கல்லாடம். இதன் பாயிரமாக விளங்கும் இறை வணக்கச் செய்யுட்களை முன்னர்க் கண்டோம்.

நூலின் முதற்செய்யுள் "தமர் நினைவுரைத்து வரைவு கடாதல்" என்னும் துறையைச் சார்ந்தது. இதற்குரிய திருக் கோவையார்ச் செய்யுள் :

சுற்றும் சடைக்கற்றைச் சிற்றம் பலவன் தொழாதுதொல்சீர்
கற்றும் அறியல ரின்சிலம் பாவிடை நைவதுகண்டு
எற்றும் திரைஇன் னமிர்தை இனித்தமர் இற்செறிப்பார்
மற்றும் சிலபல சீரூர் பகர்பெரு வார்த்தைகளே.

களவு வாழ்க்கையிலேயே கருத்தூன்றியிருக்கும் தலை மகன், தலைமகளை மணந்து கொள்ள வேண்டும் முயற்சியில் ஈடுபடத் தூண்டுகின்ற தோழியின் கூற்றாக இது அமைந்துள் ளது. தலைமகள் மணப்பருவம் எய்திவிட்டதால், அவளது பெற்றோர் அவளை இனி வீட்டில் இருத்துவர் என்றும், அவளை வெளியில் கண்டு அளவளாவுதல் இனி இயலாது என்றும், அது மட்டுமன்றி ஊரிலுள்ள அயலார் மகட்பேச முற்படல் போன்ற பேச்சுக்களும் எழுந்துவிட்டன என்றும், கூறித் தலைமகன் இனிக் காலந் தாழ்த்தாது மணமுயற்சிகளை மேற்கொள்ள வேண்டு மெனத் தோழி வற்புறுத்துகிறாள். 'சிலம்பா' என அவனை விளித்துக் கூறுகின்றவள், " கல்வியின் பயன் கடவுளைத் தொழுது அவன் புகழ் பாடுதல்; கற்றும் இறைவன் பொருள்சேர் புகழை அறியாதவர், கல்வியின் பயனை இழந்தவர்; அதுபோல் பெறுதற்கரிய அமுதம் போன்ற இத்தலைவியின் அன்பைப் பெற்றும், அவளை மணந்து அவளோடு வாழ்ந்து வாழ்க்கையின் பயனை நிலையாகப் பெற முயலாது, களவு வாழ்க்கையில் ஈடுபடல் அறியாமை" என்கிறாள். இதனை வெளிப் படையாகக் கூறாமல் குறிப்பாகச் சுட்டிக்காட்டி உய்த்துணரச் செய்யும் தோழியின் திறமையே திறமை.

இப்பாடலின் கருத்தைக் கல்லாடனார் தமக்கே உரிய தனிச் சிறப்பு வாய்ந்த முறையில் பற்பல வனப்புக்களோடு மிளிரும்

சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார். எடுத்துக் கொண்ட கருத்துக்கியைய அதனோடு சார்ந்தவற்றையும் பொருத்தமாக விளக்குகிறார். மதுரையின் சிறப்பை யொட்டித் திருப்பரங்குன்றம் இடம் பெறுகிறது.

### திருப்பரங்குன்றம்:

திருப்பரங்குன்றில் பல்வகை ஒலி நயத்தோடு வீழ்கின்ற அருவிகள் உள்ளன. (அக்காலத்தில்!). ஆங்காங்கு நெடிதுயர்ந்து செழித்துள்ள மரங்களில், முழு நிலாப் போன்ற தேனடைகள் தொங்குகின்றன. அவற்றில் சுவைமிகுந்த தேன் நிரம்பியுள்ளது. கற்பன கற்று எவ்வுயிர்க்கும் சிறந்த அருள் பழுத்து விளங்கும் சான்றோர் உள்ளம் போலத் தேனடைகள் நிறைந்துள்ளன. அத்தகைய வளம் வாய்ந்த பரங்குன்றில் வள்ளியம்மையார் கணவனாகிய முருகப்பெருமான், மயிலூர்தியுடனும் சேவற்கொடியுடனும் எழுந்தருளியிருக்கிறார். அவர் கையில் சுடர்விடுகின்ற இலைமுக நெடுவேல் இலங்குகின்றது.

### வேலின் வெற்றி:

அவ்வேல் அடைக்கலம் என்று புகுந்தார்க்குப் புகலிடம் அளிப்பது. அவர்க்கு வரும் இடையூற்றைப் பொடிபடுத்துவது. தேவர்க்கரசனாகிய இந்திரன், தான் பயன் பெறுதற்காகப் பாற்கடலைக் கடைந்து படைத்துக் கொண்ட அமுதமும், கற்பகத் தருவும், சூரபதுமனால் பறித்துக் கொள்ளப்பட்டன. அவன் மகன் சயந்தனும் சிறையில் வாடினான். ஏனைய தேவர்களும் துன்புற்றனர். அவர்கள் துன்பம் துடைக்க அருள் வேலன் எழுந்தான். சூரபதுமனது தம்பியாகிய தாருகன் முருகப்பெருமான் முன்பு நிற்கலாற்றாது போர்க்களம் விட்டு ஓடி ஒளித்தான். கிரவுஞ்சம் என்னும் மலையாக மாறினான். பூதப்படைகளைத் தன்னகத்துத் தேக்கி மறைத்தான். அம்மலையைப் பிளந்து பொடியாக்கியது முருகன் வேல். அடைபட்ட அனைவரையும் மீட்டது.

### கருணைப் பெருமான்:

அங்ஙனம் அடியடைந்தாரைக் காக்கும் அளப்பரிய ஆற்றலுடைய வேல் ஏந்திய முருகப்பெருமான் எழுந்தருளிய திருப்பரங்

குன்றத்தைத் தனக்கு அண்மையில் கொண்டது மதுரைமா நகரம். அங்கு ஆலவாயில் அமர்ந்தருளும் பிறவா யாக்கைப் பெரியோன் புலவரேறு; சொல்நிறைந்த பொருளும் அதன் இலக்கியமுமாகத் திகழ்பவன். பாண்டிய மன்னன் பூங்காவில் துணைவியொடு உலாவும் போது புதியதாய் நுகர்ந்த நறுமணம் குறித்து மனத்துட் கொண்ட கருத்தினைப் பொதிந்து ''கொங்கு தேர் வாழ்க்கை'' என்னும் அருமையான தமிழ்ச் செய்யுளைப் பாடிக் கொடுத்துத் தருமி என்னும் ஏழை ஆதிசைவ அந்தணனுக்கு ஆயிரம் பொற்காசுகள் நிறைந்த பண முடிப்புக் கிடைக்கும் வண்ணம் பேரருள் புரிந்தவன். இது குறுந்தொகை என்னும் நூலின் இரண்டாவது செய்யுளாகத் திகழ்கிறது. நலம் புனைந் துரைத்தல் என்னும் துறையைச் சார்ந்தது. இதில் அமைந்துள்ள வரலாற்றின் விரிவைத் திருவிளையாடற் புராணத்தில் ''தருமிக் குப் பொற்கிழி யளித்த படலத்தில்'' காண்க. அங்ஙனம் தன்ன டித்தொண்டர்க்கு எளிவரும் இயல்புடையவனுகிய எம்பெருமான் எம்பிராட்டியாகிய அங்கயற்கண் ணம்மையுடன் என் உள்ளத் தில் எழுந்தருளியிருந்து இம்மை, மறுமை, வீட்டின்பம் ஆகிய எல்லாப் பெரிய பயன்களையும் கொடுக்கவல்ல பெருங்கருணை யாளன். உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்தறிந்து அவர் கருத்தை முடித்து அருள்செய்யும் இறைவனைத் தோழி வாயிலாகக் கல்லாடனுர் கூறுவதைக் கண்டு மகிழ்க.

என்னுளம் குடிகொண்டு இரும்பயன் அளிக்கும்
கள்ளவிழ் குழல்சேர் கருணைஎம் பெருமான்
**மலர்ப்பதம்** நீங்கா உளப்பெரும் சிலம்ப!

தோழியின் வேண்டுகோள் :

அப்பெருமானது மலர்போன்ற திருவடிகளை என்றும் உள்ளத்தில் கொண்டிருக்கும் பெரிய நாட்டின் தலைவனே! உன் உள்ளம் வாழ்வதாக. நான் சொல்வதையும் அக்கருணை யுள்ளத்தில் ஏற்றுச் சிறிது சிந்தனை செய்வாயாக. தகுதி யில்லாத கயவர்களுக்கு மெய்ப்பொருள் நூல் உணர்த்துவது தவறு. அவ்வாறு உணர்த்தும் ஆசிரியர்க்குக் குற்றம்பெருகும். அப்பெருக்கம் போலத் தலைவியின் மார்பகங்கள் பருவத்தால்

பூரித்துப் பெருத்தன; வளர்ச்சியும் கவர்ச்சியும் பெற்றுள்ளன; அவற்றைத் தாங்க இயலாத அவள் இடை, உயிர்களைக்கொன்று அவற்றின் ஊனை உண்பார் செய்யும் தவம் தேய்வது போன்று தேய்ந்து சிறுத்து உடுக்குப்போல் ஆகிவிட்டது. இறைவனை நினைந்து வாழ்த்தி அவன் அஞ்செழுத்தும் உணராதார் நெஞ்சத்தைப் போல் அவள் கூந்தல் இருண்டு, கதிரவனைக் கண்டு மறைந் தொழியும் புற இருள் போலாது, இருட்சியால் கொன்றைப் பழத்தின் நிறத்தைப் புறங்கண்டு வென்று நிற்கும் இருளும் உண்டு என்பதைக் காட்டுகின்றது. அவளது ஆம்பல் மலர்போன்ற கண்கள், முன்புபோல் கள்ளமறியாத வெள்ளை நோக்கம் இன்றி, உனக்குப் பிணியும் மருந்துமாய்ப் பிறழப் பிறழமின்னும் அழகிய நோக்கத்தைப் பெற்றுள்ளன. இவற்றைக் கண்டுகொண்ட அவள் பெற்றோரும் சுற்றத்தாரும் வெகுண்டு, அவளை இற்செறிவிக்கும் நோக்கத்துடன் சிலபல பேச்சுக்களைப் பேசுகின்றனர். அதுவன்றியும் ஊரிலுள்ள பிறர், இவளை மகட் பேச முனைவார் போலப் பல பல பேசுகின்றனர். (எனவே, பெருமானே! வரைவுக்கான முயற்சியை நீ விரைந்து மேற்கொள்வாயாக.)

கல்லாடர் விளக்கம் :

இக்கருத்துள்ள பாடல், திருக்கோவையார்ச் செய்யுளுக்கு மிகச் சிறந்த விளக்கமாக அமைந்திருப்பதைக் காணலாம். திருக்கோவையார்ச் செய்யுளிற் போலவே, இங்கும் தலைவன் "சிலம்பா" என்று விளிக்கப் பெறுகிறான். மேலும் கருணையே வடிவமான ஆலவாய் அண்ணலது மலர்ப்பதம் நீங்காத உள்ளமுடையவனாகவும் திகழ்கிறான். இறைவனது திருவடியை மறவாதார், எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் என்பதில் ஐயமும் உண்டோ? அத்தகையவன் திருவருள் துணையோடு வரைவு முயற்சி மேற்கொண்டால் பெற்றோரும் ஏற்பர்; மணமும் நடைபெறும்,என்றும் இடையறாத இன்பம் நிலவும் இல்வாழ்க்கையைப் பெறலாம்; அதன் பயனாக ஐம்புல இன்பம் ஆர ஆர்ந்தும், சிந்தையை இறையருள் வழியே செலுத்துதலின் அந்த முத்தியைப் பெறுதலும் ஒருதலை – என்பன போன்ற கருத்துக்கள் எல்லாம் இதனுள் தோன்றுமாறு காண்க.

உடலக்கண்ணனுகிய இந்திரன், அமுதும் தருவும்பெற்றும் தக்க யாகத்தில் கலந்துகொண்ட குற்றத்தால் அவற்றை இழந்து துன்புற்றான். பின்பு பிழை யுணர்ந்து இரங்கி வழி பட்டதால், முருகப் பெருமான் கருணையால் மீட்டும் அவற்றைப் பெற்றான். அவனைப் போன்றவனல்லன் இத்தலைவன். இவன் உள்ளம் இறைவன் திருவடிப் போதினை மறவாதது. தேன் நிறைந்து பொங்கும் தேனடைபோலச் செழுங்கருணை ஓடிப் பெருகும் உயர்வுடையது. அத்தகைய உள்ளம் தலைவிமாட்டுக் கருணை காட்டத் தவறாது. தலைவியின் துன்பம் உணர்ந்து அதனைத் துடைக்கத் தயங்காது. ஒருகால் களவின்பத்துக் கொண்ட அயர்வினால் மண முயற்சியைத் தள்ளிப் போட்டால், அயலார் மணம் பேச வந்து பெற்றோரும் ஏற்க நேரின், அது தலைவியின் உயிருக்கே இறுதியாக முடியும். அந்நிலைமை ஏற்படத் தலைவன் இடந்தரல் ஆகாது, என்பதனை இந்திரன் கதையை நினைவூட்டி, இந்திரனைப் போல இழந்ததை மீளப்பெற இயலாது என்று வற்புறுத்திக் குறிப்பால் உணர்த்தும் திறம் வியப்பிறந்து நிற்கிறது. கடலமுது எனக் கோவையாருள் வருணிக்கப்பட்ட தலைவியின் நலத்தைப் பற்பல உவமைச் சிறப் புக்களோடு கல்லாடனார் விரித்துரைத்திருப்பது எண்ணி இன் புறத்தக்கது. தலைமகன் திருமண முயற்சியில் ஊக்கம் கொள் வதற்காக, அவன் உள்ளத்தின் சிறப்பைப் புகழ்ந்து கூறும் வகையில், கூடற்பெருமான் திருப்புகழும், மதுரைச் சிறப்பை ஒட்டிப் பரங்குன்றின் சிறப்பும் முருகப் பெருமான் புகழும், இணைத்துக் கூறப்பட்டுள்ள தன்மை யாவரையும் ஈர்க்கும் இயல் புடையது.



Vol. XVII. A. D. 1964. No. 3 Saka 1886.

# * PRAYER OF A PHYSICIAN.

"Thy Eternal Providence has appointed me to watch over the life and health of Thy creatures. May the love for my art actuate me at all times; may neither avarice, nor miserliness, nor the thirst for glory, nor for a great reputation engage my mind; for the enemies of Truth and Philanthropy could easily deceive me and make me forgetful of my lofty aim of doing good to Thy Children.

"May I never see in the patient anything but a fellow creature in pain.

"Grant me strength, time, and opportunity always to correct what I have acquired, always to extent its domain; for knowledge is immense and the spirit of man can extend infinitely to enrich itself daily with new requirements. Today he can discover his errors of yesterday and tomorrow he may obtain a new light on what he thinks himself sure of to-day.

"O God, Thou hast appointed me to watch over the life and death of Thy creatures; here I am ready for my vocation."

– From the Oath and Prayer of
Maimonides – a Jewish Physician
of the Twelfth Century.

---

*Reproduced with kind permission of the Tanjore Sarasvati Mahal Library.

# மகாவித்துவான் ஸ்ரீ மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்

## 150-ஆவது ஆண்டு நிறைவு விழா.

### வேண்டுகோள்

பத்தொன்பதாம் நூற்ருண்டில் அவதரித்த தமிழ்க் கவிஞர்களுள் மிகச் சிறந்தவரான திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீ பிள்ளை அவர்கள் 22 புராணங்கள், 6 காப்பியங்கள், 45 பிரபந்தங்கள் அளவிறந்த தனிப்பாடல்கள் ஆகியவற்றை இயற்றியுள்ளார்கள். இவற்ருேடு மாணவர்களுக்குப் பாடம் போதிப்பதிலும் இவர் இணையற்றவராக விளங்கினர். ''எங்கெங்கே தமிழ் நூற்களை முறையாகப் படித்தறியும் உணர்வும் பழைய புராணங்கள் பிரபந்தங்கள் முதலியவற்றைப் பயின்று இன்புறும் இயல்பும் திகழ்கின்றனவோ அங்கெல்லாம் இவருடைய தொடர்பேனும் இவர்பாற் பாடங் கேட்டவர்களுடைய தொடர்பேனும் பெரும்பாலும் இருக்கும். இன்றும் ஓரளவில் புலவர்களுடைய நூல்களின்பால் உள்ள மதிப்புக்கு மூலகாரணம் இவரென்றே சொல்லலாம். தமிழ்த் தெய்வத்தின் திருத்தொண்டர்களாகித் தமிழகத்தைத் தமிழன்பில் ஈடுபடுத்திய பெரியார்களுடைய வரிசையில் இவரும் நிற்பர்......தமிழ் உள்ளளவும் இவருடைய பெரும் புகழ் நின்று நிலவுமென்பது திண்ணம்.'' என்று, பிள்ளையவர்களின் சரித்திரத்தை எழுதி வெளியிட்டுள்ள மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் எழுதியிருக்கிருர்கள்.

அத்தகைய பெரியாரின் 150-ஆவது ஆண்டு நிறைவு 6-4-1965 அன்று நிகழவிருக்கின்றது. அந்நன்னுளைத் தமிழகம் முழுமையும் உள்ள தமிழன்பர்கள் தத்தம் தொடர்புள்ள கல்விச்சாலைகள், தமிழ் மன்றங்கள், கோயில்கள் முதலிய இடங்களில் ஏற்ற முறையில் கொண்டாடி, ஸ்ரீமகா வித்துவானுடைய பெருமை நன்கு பரவச் செய்வது தமிழுக்குச் செய்யும் சிறந்த தொண்டாகும், தமிழன்பர்களின் கடமையுமாகும். ஆதலால் அன்பர்கள் ஊக்கங்கொண்டு இத் தொண்டினை ஆற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிருேம்.

இவ்விழாவைப் பயனுறக் கொண்டாடுதற்குரிய ஆலோசனைகளை அன்புகூர்ந்து இந்நூல் நிலையத்திற்குத் தெரிவித்தால்,வந்தனத்துடன் ஏற்றுச் செயலாற்றலாகும்.

டாக்டர் ஐயரவர்கள் எழுதியுள்ள ஸ்ரீமகா வித்துவான் பிள்ளையவர்களின் விரிவான வாழ்க்கைச் சரித்திரத்தின் சுருக்கமொன்று - மூல நூலிலுள்ள சொற்ருெடர்களைக் கொண்டே அமைத்தது - 1964 டிசம்பர் மாதக் கடைசியில் இந்நிலையத்தினின்று வெளிவரும்.

அமைச்சர்,

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்,

15-10-64. திருவான்மியூர், சென்னை-41.

# தாயுமானவரின் – பராபரக்கண்ணிகள்

**Couplets in venerable adoration of the Omnipotent and Omnipresent**

sung by

St. THAYUMANAVAR

15

In Saivism there are several methods expounded in the Sacred scriptures, to worship the Supreme Self. Green leaves, fresh flowers, holy-water, good incense, etc ared escribed as the best offerings to the Lord. In Tamil Mythology a story is told that two saints tried their best to worship the Lord with new flowers, which are not even smelled by the bees. They thought that the flowers smelled and touched by something else are not worthy for worship. This point strikes our saint.

Even if the newly blossomed flowers are so discriminated by devotees, what will be the fate of green leaves, which are very old by hours and days. certainly they should not be used for the worship. Then what? Except the pure and pious heart, all other things are not good at all. So please have a good and loving heart while you worship the Lord. This is indirectly conveyed in the ensuing couplet.

"எச்சிலென்று பூவை இகழ்ந்தோர்க்கு உனைப்போற்றப்
பச்சிலையும் கிள்ளப் படுமோ பராபரமே!

(பொ – ரை) வண்டினால் எச்சிலாய் விட்டதென்று பூவை நீக்கினோர்கட்குத் தேவரீரை அருச்சித்து வணங்கப் பச்சிலை தானும் கிள்ளத் தகுதியாமோ?

Oh........ Lord Supreme! If your devotees discard the flowers considering them to have been defiled by the bees and rendered unfit for worship, is it, then proper, on their part to pluck the green leaves for the same purpose?

———

(தொடரும்)

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar.

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உ ரை ந டை



பாலகவி வயிநாகரம்,

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.



### காப்புப் பருவம்

### துதி

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
பொருப்பிற் பிறந்துதவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர்
போர்க்களிற் றைப்புணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்தபைங் கூந்தற்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்
மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள்
வேழங் கடம்படுபடா
வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை
விண்டுதண் டேன்றுளிக்கும்
கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
குருசிலைப் பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
கொழிதமிழ்க் கவிதழையவே. 1

மின்னலை ஒத்த சிறிய இடையையும் பெரிய போர் செய்கின்ற கண்களையும் உடைய தெய்வயானை யம்மையார், தமது குடங்களை ஒத்த தலைசாயாத விருப்பம் மிக்க கொங்கைக் கொம்புகளைக் கொண்டு உழுது உழுது கலக்க, அதனால் மொட்டு

விரிந்து குளிர்ந்த தேனைச் சிந்துகின்ற பெருமை பொருந்திய கடப்பம்பூ மாலையை அணிந்த அகன்ற தோள்களையுடைய தலைவனை, போர் செய்கின்ற வேற்படையைக் கையிற் பிடித்த குமரனை, வைத்திசுவரன் கோயில் என்று வழங்கும் கந்தபுரியில் எழுந்தருளியுள்ள முருகனைப் பாடிப் பரவுகின்ற எனது வளங் கொழிக்கின்ற தமிழ்க் கவிகளானியன்ற பிள்ளைத் தமிழ் நூல் தழைத்தோங்குதற் பொருட்டுப் பொன்மயமாக விளங்குகின்ற அழகிய உச்சிக்குவடுகளைக் கொண்ட இமயமாகிய பெரிய மலை யிற் பிறந்து வெள்ளொளி வீசுகின்ற திங்கள் தவழும் பெரிய வெள்ளி மலையில் உள்ள ஒப்பற்ற போர்க் களிற்றை ஒத்த சிவ பெருமானை மணந்து இனிமை மிகுந்த பாடல்களை இசைக்கின்ற வண்டுகள் மொய்த்த பசிய கூந்தலையுடைய செழுமையான பெண்யானையை ஒத்த உமாதேவியார் பெற்றுத்தந்த சிறிய கண்களையும் பெரிய செவிகளையுமுடைய யானைக் கன்ருகிய விநாயகப் பெருமானது இரண்டு செவ்விய திருவடிகளை வணங்குவோம்.

### திருமால்

பூமேவு கற்பகப் பொங்கரிற் செங்கட்
புலோமசை வளர்த்தகும்பப்
புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு
பொருப்பனை விருப்பனைத்தும்
கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த
குழகனைக் கழகந்தொறும்
கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக்
குமாரனைத் தனிபுரக்க
தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரிகண்
திகிரிகிரி குலகிரியொடும்
திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடற்
றெண்டிரை முகட்டுதித்த
பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும்
பசுங்குதலை மழலையஞ்சொற்
பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர்
பச்சைப் பசுங்கொண்டலே. 2

தெய்வங்கள் விளங்குகின்ற பொன்மயமான மகாமேரு மலையும் எட்டுத் திசைகளிலுமுள்ள திக்குயானைகளும் சக்கர வாள மலையும், குலமலைகளுடன் பெயரும்படியாக மேருமலை யாகிய மத்தினல் கடையப் பெரிய கடலினது தெள்ளிய அலை முகட்டிலே தோன்றிய பாடல்களிற் பொருந்திய இனிமை கனிந்து அமுதொழுகுகின்ற பசுமை பொலிந்த அழகிய மழலை மொழிகள் பேசும் செந்தாமரைச் செல்வியாகிய திருமகளது இரண்டு கொங்கைகளாகிய மலைகளின் உச்சியில் வளருகின்ற பச்சைப் பசுங் கொண்டலாகிய திருமால், பூக்கள் நிறைந்த கற்பகச் சோலையில் செவ்வரி படர்ந்த கண்களையுடைய இந்திராணி வளர்த்த குடங்களையொத்த இரண்டு கொங்கைகளை யுடைய மகிழ்ச்சிக்குரிய தெய்வயானை விளையாடுகின்ற பன்னி ரண்டு தோள்களாகிய மலைகளை உடையவனை, இச்சை முழு வதையும் மேன்மைமிக்க தினைப்புனச் சாரலிலே வளர்ந்த குறச் சிறுமியாகிய வள்ளியம்மையாரிடம் வைத்த கட்டிளங் காளை யைக் கழகங்களனைத்திலும் முத்தமிழ் நூல் தொகுதிகள் மிகுந் திருக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளியுள்ள முத்துக் குமாரப் பெருமானைச் சிறப்பாகப் புரப்பாராக.

வைத்தியநாதர்

ஒருபு றத்துமர கதமி மைப்பவொளிர்
மாமேரு மற்றெரு மேருவைச் சாய்த்தென
உலக ளக்கநிமிர் வடபொ ருப்பையொரு
தோளால்வ ளைத்தபி ஞகியைத் தீக்கனல்
உமிழு முக்குடுமி யயிறி ரித்துவரு
வாய்வாண்ம முப்படை வீரனைப் பார்த்தனெ
டுடலு மற்றெழிலி னறவி ளைத்துமெதிர்
ஓடாது டற்றுகி ராதனைக் கூக்குரல்
விரிக டற்புடவி முழுது ணச்சமையும்
ஓர்காளை கட்டுப்ர தாபனைக் கார்க்கடு
விடமெ டுத்தரிய திருமி டற்றிலிடு
காமாரி யைக்கவு மாரியைப் போற்றிரு

விழிமு னிற்கும்வடி வழகு டைக்கடவுண்
மாமோகி னிற்கும ஞானச் சூக்கும
வெளியி னிற்பரம நடந விற்றுதிறல்
வேளூர்வ யித்திய நாதனைப் போற்றுதும்

குரவு செச்சையொடு நறவு யிர்ப்பவிரி
தேனூறு வட்டெழு மார்பனைப் பேய்த்திரள்
குரவை யிட்டவுணர் தடிசு வைத்திடவொர்
கூர்வேல்வி டுத்தகு மாரனைப் பார்ப்பதி
குமர னைச்சமரி லுருமு கக்குளிறு
காலாயு தக்கொடி யாளனைக் கோட்டிய
குறுந கைக்குமன முருக வெற்பவர்த
மானோடு மற்பொரு தோளனைத் தாக்கிய
திரண்ம ருப்பினமர் பொருத னிக்கடவுண்
மால்யானை யைப்புணர் காளையைச் சாற்றிய
செழும றைப்பொருளி னுரைவி ரித்துமெனும்
வேதாமு முடித்தலை மோதுகைக் காய்ப்பொடு
திருவ டித்துணையென் முடிப தித்தவடு
ஆருத மெய்ப்புக ழாளியைப் பூட்டிய
சிறைவி டுத்தமரர் குறைமு டித்துதவு
சேனாப திப்பெரு மாடனைக் காக்கவே. 3

குராமலர் வெட்சி மலருடன் நறுமணத்தை வீசப் பெருகுகின்ற தேன் ஆறு போலப் பாய்ந்து மிகும்மார்பை உடையவனை, பேய்க் கூட்டங்கள் குரவைக் கூத்தாடி அசுரர்களது உடல் தசைகளை உண்டு சுவைக்கும்படி ஒப்பற்ற கூர்மை மிக்க வேற்படையை விட்ட குமாரப் பெருமானை, பார்வதியம்மையாரின் புதல்வனை, போரில் இடியும் கெடும்படி கொக்கரிக்கின்ற காலாயுதமாகிய சேவற் கொடியை உடையவனை, வெளிப்படுத்திய புன்முறுவலுக்கு உள்ளம் உருகி மலைவாணர் மகளாகிய மான் போன்ற வள்ளியம்மையாருடன் மற்போர் செய்த தோள்களையுடையவனை, எதிர்த்துத் தாக்குகின்ற திரண்ட கொம்புகளை

யொத்த கொங்கைகளால் போரைச் செய்கின்ற ஒப்பற்ற பெரிய தெய்வ யானையைப் புணர்ந்த கட்டிளங் காளையை, சிவபெருமான் அருளிச் செய்த செழித்த வேதத்தின் உரைப்பொருளை விரித்துச் சொல்லுவேனென்ற நான்முகனது முடி சூடிய தலைகளில் குட்டியதனுல் உண்டாகிய கைவடுவுடன், திருவடிகள் இரண்டையும் எனது சிரசிலே சூட்டிய வடு ஆருத மெய்ப்புகழுடையவனை, சூரபன்மன் பூட்டிய சிறையிலே யிருந்து விடுவித்துத் தேவர்களின் குறையை முடித்து உதவிய சேனுபதிப் பெருமானைக் காக்கும்படி வேண்டி, இடது பாகமாகிய ஒரு பக்கத்தில் மரகதம் போன்ற உமாதேவியார் விளங்க ஒளி வீசுகின்ற மகாமேருமலை மற்றொரு மகாமேருமலையைத் தலை சாய்த்துப் பிடித்ததைப் போல முன்னொரு காலத்தில் இந் நிலவுலகத்தின் எடையை அளந்து கணக்கிட்டறியும்படி உயர்ந்த வடமேரு மலையை ஒரு தோளால் வளைத்த பிநாகம் என்னும் வில்லையுடையவனை, தீக்கனல் கக்குகின்ற முத்தலைச் சூலத்தையும் எதிர்த்து வருகின்ற கூர்மையான வாயையுடைய ஒளி பொருந்திய மழுப்படையையும் உடைய வீரனை, அருச்சுனனோடு எதிர்த்துப் புரிந்த மற்போரில் மிகுதியாக இளைப்படைந்தும் எதிர்நின்று ஓடாது பொருத வேட வடிவம் கொண்டவனை, பேரொலியை எழுப்புகின்ற கடல் சூழ்ந்த நிலவுலகம் முழுவதையும் உண்ணுதற்கு அமைந்த ஒப்பற்ற திருமாலாகிய காளையை அடக்கி ஊர்கின்ற வீரத்தால் வந்த புகழுடையவனை, கருமையாகிய ஆலகால விடத்தை எடுத்து அருமையாகிய அழகிய கண்டத்தில் இட்ட காமதகனனை உமாதேவி கொழுநனை, சிற்பர வியோமமாகிய சிதாகாசச் சூக்குமப் பெருவெளியில் ஆனந்தக் கூத்தாடுகின்ற பெருந்திறனுடைய வேளூர் வயித்தியநாதப் பெருமானை வணங்குவோம்.

(தொடரும்)



# A CANONIZED SAIVA SAINT

Sri. E. S. VARADARAJA IYER.

---

There lived in Karaikkal an affluent merchant by name Danadatta. He had a charming daughter named Punithavathi. This girl, even while very young, highly precocious and inquisitive. Her sportive activities were godly and far from being childish. She was married to one Paramadatta of Negapatam. Being the the only daughter of his family and a dear one, Danadatta planned to have his son-in-law at Karaikkal itself. The couple led the virtuous life of a typical house-holder and they never failed to feed or clothe Siva Bhaktas.

One day when Paramadatta had been engaged in his shop, Siva himself came to the abode of Punithavathi in the guise of a devotee in order to test her devotion. Standing in the threshold, he told the inmate that he was very hungry. The young lovely damsel considering his pinching hunger ventured to feed him with one of the mango-fruits which her husband sent her in the morning. The fruit was served and the devotee went away quite satisfied with her hospitality.

Towards noon Paramadatta came home and his wife served him meals along with the mango-fruit that remained with her. He ate it and attracted by its sweetness, ordered for the other fruit also. His wife moved a little with intent to fetch it when her lovable

act of having served the same to the guest came to her memory. But fearing the suspicion that may arise in his mind, she prayed to Siva, when a highly delicious fruit was placed in her hand. The latter ate it and admiring its extraordinary sweetness, told her that the fruit she served him with, could not be the one which he sent her and asked her where she got it from. Poor Punitavati was in a fix. She could not tell him what actually took place; but being a highly devoted wife, she informed him that Siva listened to her prayers and gave that to her. The husband did not believe her statement, and asked her to fetch another if really Siva was so very considerate as to grant her all she wanted. Punithawathi prayed again and down came another fruit which was sure to excel in sweetness, the othcr two ones. She placed the mango in the palm of Paramadatta, but when he raised his hand to taste it, it vanished, as if by magic.

The husband saw what happened and was stunned by the divine qualities of his wife who could have Siva at her beck and call. He then resolved to quit her. After a long journey to various places he settled in the Pandya country. Here he married another girl who bore him a daughter.

Years rolled on. The parents of the girl learned that Paramadatta was in the Pandya nadu and took their daughter to reunite her with her husband. As soon as they reached his place, Paramadatta hurried and prostrated at the feet of Punithavathi. People who stood by asked him why he bowed before his wife. He told them that she was no longer his wife and that she was her family deity. Punithavathi realised her hopless plight and said to herself 'Now I have caught

his idea to give me up. Hence I must shake off all that pertains to my mortal coil including personal charm' So saying she prayed to Siva to give her the form of a she-demon. Her request was granted - She then went about from sacred place to sacred place. Her legs wore out and she crawled with her hands. When the hands too became exhausted, she walked with her head and reached kailas the abode of Siva. Siva was then sitting with his consort Parvathi who asked her Lord about the fragile creature that approached them crawling on its head. Siva told her that she who approached them was a devotee staunchly attached to them and that her demon-shape was given to her by him at her own request. Parvati paused a little. Her memory went back to the days when she married Siva, when the latter told her that he had neither father nor mother and a sort of fear now cropped up in her mind that she too would thereafter have the misfortune to serve a mother-in-law who as a class have earned a notoriety for their unkindress to their daughter-in-law. Meanwhile, the demon-form went near the Lord who embraced her accosting her as amma or mother. Punithavathi too called him appa or father. When Siva asked her what she wanted, Punithavathi told him that the darshan he had been pleased to vouchsafe tc her was quite enough and that she wanted none. When, however, pressed to make a request, the she-demon told Him that she wanted nothing but imperishable love and sempiternal bliss at his feet and that she should be freed from birth adding that, if owing to prarapta she was destined to take human shape again she should on no account forget Him and that she should ultimately have the unique privilege of singing His glories while He danced

the cosmic dance. This ardent devotee by virtue of her having been addressed as Amma by Lord Siva himself came to have the appellation Karaikkal Ammayar. She composed Arputhatiruvanthathi and some vritham verses in praise of her divine benefactor and her life has been sung by the poet Sekkizhar in his Periya-purana.

---

# திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பர இராமலிங்க சற்குரு புலம்பற்கண்ணி*

தொகுத்தவர், திரு. P. P. துரைசாமி அவர்கள்,
கோயமுத்தூர்.

[மலர் 15, இதழ் 10-ன் தொடர்ச்சி]

கண்மணியே யென்றன் — கருத்தே கருத்திலுறும்
விண்மணியே விண்ணின் — வியனொளியே சற்குருவே 181

அறிவே யறிவிலுறு மானந்த மேநற்
செறிவும் பிறிவுமிலாச் — செம்பொருளாஞ் சற்குருவே 182

பண்ணுறு நின்னருட்பா — பாடும் வகையருள
வெண்ணுயோ நாயேற்கு — இராமலிங்க சற்குருவே 183

வாணுள்வீணுக் கழிக்கும் — வஞ்சமனத் தேனுக்குங்
கோணு நிலைசேர் — குணமுறுமோ சற்குருவே 184

குற்றங் குணமாகக் — கொண்டருளு நின்றயவாற்
சொற்ற வருட்பாவின் — சூழ்ச்சியருள் சற்குருவே 185

திரிகரணத் தான்மிக்கத் — தீவினைகள் செய்தே
யரியநின் பாதமலர்க் — கன்பில்லேன் சற்குருவே 186

என்னைய மேற்காத — வென்னெஞ் சடங்குமா
றின்னே யருள்வா — யிராமலிங்க சற்குருவே 187

தங்குகின்ற சீரருளுந் — தன்மையுள நின்னையன்றி
யெங்கு மெனைக்கொண்டணைப்பார் — யாருமிலை சற்குருவே 188

நரைதிரையு மூப்புமுற்று — நாயே னுனுக்கே
கறைவுபெற வுள்ளங் — கலங்குகின்றேன் சற்குருவே 189

கண்டோர் நகைக்குமிந்தக் — கன்மவுடலே யெடுத்தே
னுண்டோவென் போலொருவ — ருத்தமவென் சற்குருவே 190

(தொடரும்)

*திரு. ச. மு. கந்தசாமி பிள்ளையவர்கள் இயற்றியது.

# இளங்கோ ஞாயிறு

**திரு. ஆறு. அழகப்பன், M. A.,**
தமிழ் விரிவுரையாளர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
அண்ணாமலை நகர்.

வாழவேண்டும் என்ற வேட்கையோடு புறப்பட்ட ஒருவன் கூற்றுவனை உடன் கொண்டு போனது போல கையிலே சிலம்பு என்ற கூற்றத்தோடு மதுரைக்குப் புறப்பட்ட கோவலனைப் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனைப்போல் காப்பியத் தந்தை இளங்கோவடிகள் அவசரப்பட்டுக் கொன்று விடாமல் குடி மகனைக் காக்கும் செங்கோல் அரசுபோல கோவலனைப் பாது காப்போடு மதுரைக்கு அழைத்துச் செல்கின்றார். இனிக் கோவலன் பாதுகாக்கப்பட முடியாதவன், அவன் இறந்தே தீர வேண்டும் என்ற நிலை ஏற்படுகின்ற பொழுது சாவு வருவதைப் பார்த்துக்கொண்டிருந்த கோவலன் ஊமையாக இருந்ததுபோல இளங்கோவடிகளும் அமைதியுற்று 'இறுதி வெண்பா' இயற்றி இறந்ததிற்குக் காரணம் காட்டிக் காதையை முடிக்கின்றார். இளங்கோவடிகளின் வைர அறிவு கோவலன் இறப்பின் மூலம் மேலும் ஒளிவீசுகிறது.

வேட்டுவர்கள் கண்ணோட்டமற்ற வன்னெஞ்சம் உள்ளவர்கள். இவர்களை 'மாரிவளம் பெறு வில்லேர் உழவர்' "இட்டுத்தலை யெண்ணும் எயினர்" "அடல்வலி எயினர்" "விற்றொழில்வேடர்" "அரையிருள் அடுபுலிவினையவர்" "கண்ணில் எயினர்" "பொருள் கொண்டு புண்செயினல்லதை யார்க்கும் அருளில் எயினர்" என்று இவ்வாறெல்லாம் இளங்கோவடிகள் அழைப்பதிலிருந்து இவர்களது பண்பாடு நன்கு விளங்கும். கண்ணகி, கோவலன்

கவுந்தியடிகள் இம்மூவரும் வேட்டுவர்கள் வாழிடம் நோக்கி வழிப்போக்கராக "மத்தக மணியொடு வயிரம் கட்டிய பத்திக் கோவணப் பசும்பொன் குடைச்சல் சித்திரச் சிலம்பொடு" வந்த போழ்து சாலினி என்ற வேட்டுவப் பெண்தெய்வம் ஏறப்பெற்ற வேட்டுவர்களை நோக்கி வழிவளஞ்சுரக்க வேண்டும் என்று ஆணையிட்டுக் கொண்டிருந்தாள். தெய்வம் வேண்டிக் கொள்வ தற்கேற்ப அவ்வேட்டுவர்களும்" 'ஆரியடையத்தத் தியங்குந ரல்லது மாரி வளம் பெருவில்லேர் உழவர்களாவர்' இத்தன்மை பெற்ற கொடுமையே உருவான அக்கூட்டத்திடையே வழிப் போக்கராகக் கையில் விலைமதிப்பற்ற பொருளொடு வேட்டுவர் களின் "வழிவளமாக" வந்த கண்ணகி, கோவலன் கவுந்தியடி கள் ஆகியோர்க்கு இவ்வேட்டுவர்களால் துன்பம் நேர்ந் திருக்க வேண்டும். உடலுக்கோ உயிர்க்கோ ஊறு நேர்ந்து கொண்டுவந்த கைப்பொருளும் இவர்களால் கவரப்பட்டிருத்தல் வேண்டும். இளங்கோவடிகளின் கருத்துப்படி "பொருள் கொண்டு புண்செய்து அருளில் எயினராக" இருந்திருக்க வேண்டும். அதாவது முறைசெய்து காப்பாற்ற அதனுல் நாட் டில் இறையென்று கருதப்பட்ட நெடுஞ்செழியனுல் சிலம்பும் உயிரும் கவரப்பட்ட நிகழ்ச்சி நாகரிகமும், கண்ணோட்டமும் அற்ற காட்டுவாழ் வேட்டுவர்களிடமே நிகழ்ந்திருக்கவேண்டும். ஆனுல் காப்பிய நாயகனும், நாயகியும் இருவரும் கொடுமை நிறைந்த இவர்களிடம் எவ்வித இடையூறு மின்றிச் சிலம்புகளை யும் பறிகொடுக்காமல் மதுரையில் பெற்ற 'திருடன்' 'திருடன் மனைவி' என்ற பட்டங்களைப் பெறுமல் பாதுகாப்போடும், பெரும் பாராட்டோடும் வருகின்றனர். சாலினித் தெய்வம் எய்யாவொரு சிறையிருந்த கண்ணகியைப் பார்த்து

"இவளோ கொங்கச் செல்வி குடமலையாட்டி
தென்தமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற் கோங்கிய
திருமாமணி"

என்று புகழ்ந்துரைக்கின்றது. இவ்விடத்தில் இளங்கோவடிகள் தன் காப்பியத்தில் புதியதொரு திருப்பத்தையே செய்து விட் டார் என்றே சொல்ல வேண்டும். இப்படி நிகழ்ந்த நிகழ்ச்சியும்

பாராட்டும் முற்றிலும் அனைவரும் எதிர்பாராத ஒன்றே யாகும். கண்ணகியைப் பாராட்டிய எயினர் கூட்டத்தைச் சிலப்பதிகாரம் மட்டும் கொடுமைக்கண் படைத்தவர்களாகக் காட்டவில்லை. எட்டுத் தொகை நூல்களில் ஒன்றான கலித் தொகையின் பாலைக்கலியில்

"இடுமுணெடு வேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை யாராற் நறுசுனை முற்றி (பாலை 12)

பொருள் கொண்டு புண்வயி னல்லதை யன்போ
டருள்புற மாறிய வாரிடை யத்தம் (பாலை 15)

என இவ்வாறெல்லாம் இவர்களுடைய பண்புகள் காட்டப்படு கின்றன. இப்படிப்பட்டவர்களிடம் பாராட்டும், பாதுகாப்பும் பெற்று வந்த கண்ணகி கோவலன் ஆகிய இருவர்களையும் அனைத்துயிர்களுக்கும் பாதுகாப்புத் தரவேண்டிய மன்னனிடம் திருடன், திருடன்மனைவி என்ற பட்டம் பெற்றதோடு மட்டு மல்லாது வரலாறுமுடிந்து போனவர்களாகவும் ஆசிரியர் காட்டு கின்றார். இது சிந்திக்கத் தக்கது.

இந்நிகழ்ச்சி போன்ற கோவலன் உயிருக்கு வருத்தம் வர வேண்டிய இன்னொரு இடத்திலும் அவன் துன்பம் சிறிதும் இன்றிப் பாதுகாக்கப்படுகின்றான். அவ்விடம் காடுகாண் காதையில் மாதவியின் தோழி வசந்தமாலையின் உருவில் வந்த கானுறை தெய்வத்திடம் இருந்து தப்பித்து வந்ததாகும்.

இவ்விரண்டு இடங்களிலும் காப்பிய நாயகனுக்குப் பாது காப்புத் தந்த ஆசிரியர் 'புறஞ்சேரி யிறுத்த காதையின் தோற்றுவாயில் ஒரு புதுமையான காட்சியைக் கோவலன் மூலமாகவே காட்டுகின்றார். பாண்டிய நாட்டில் உள்ள விலங் கினங்களைக் குறிக்க நினைக்கையில் கரடி புற்றினைத்தோண்டாது; புலி தாம் மாறுபடக் கடவமானினத்தோடு மாறுபடாது,பாம்பும், சூர்த் தெய்வமும் முதலையும் இடியும் தம்மை உற்றார்க்குத் துன்பம் செய்யா; அத்தகைய செங்கோல் நிறைந்த நாடென்று எழுதுகின்றார்.

"கோள்வ லுளியமுங் கொடும்புற் றகழா
வாள்வரி வேங்கையு மான்கண மறலா
அரவுஞ் சூரு மிரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா." புறஞ்-5-8.

இத்தகைய காட்சிகளைப்பெற்ற இப்பாடல் வரிகள் பல உட்கருத்துக்களைக் கொண்டவையாக அமைந்து கிடக்கின்றன. பாண்டிய நாட்டு விலங்கினங்கள்கடத் தம்மைச் சார்ந்தவர்க்குத் துன்பம் விளைவிக்காது என்று காட்டிய ஆசிரியர் "கோவலன், தேவிக்கு ஆவதோர் காற்கணி நீ விலையிடுதற் காதியோ" என்று விலைமிக்க சிலம்பை மன்னனைச் சார்ந்து விற்க நினைக்கையில், கோவலனிடமிருந்து சிலம்பையும் அவனது உயிரையும் பிரித்து விடுகின்றார். கவிஞர் காட்டிய காட்சிகளின் மூலம் செழியன் அவ் விலங்கின வரிசையிலும் நிற்கமாட்டாதவனாய்ப் போகின்றான்.

கொலைக்களக் காதையில் "புண்ணுமிழ் குருதி பொழிந்துடன் பரப்ப மண்ணக மடந்தை வான்துயர் கூர மடிந்த கோவலனின் வெற்றுடலைக் காண்கின்ற பொழுது கோவலன் தப்பித்து வந்த ஆரணர்த் தெய்வம், கொலைத் தொழிலை விளையாட்டாகவும் பொழுது போக்காகவும் திருட்டினைக் குலத்தொழிலாகவும் கொண்ட வேடுவர்கள், முதலியோர் பார்ப்பவர் முன்னும் வந்து செல்லுகின்றனர்.

வழக்குரைத்த காதையில் 'மன்பதை காக்கும் தென்புலங் காவல் என்முதற் பிழைத்தது கெடுகவென் ஆயுள்' என்று மாய்ந்த நெடுஞ்செழியன், 'கணவனை இழந்தோர்க்கு காட்டுவதில்' என்று உடன் உயிர் போக்கிய கோப்பெருந்தேவி ஆகிய இவர்களின் உடல்களைக் காண்கின்றபொழுது புற்றுக்குத் தீங்கு செய்யாத கரடி, மான் கூட்டத்திற்குத் துன்பம் விளைவிக்காத வேங்கை, சார்ந்தவர்க்குத் துன்பம் விளைவிக்காத பாம்பு, சூர்த் தெய்வம், முதலை, இடி, ஆகியவைகள் மனக்கண்முன் வரிசையாக வந்து செல்லுகின்றன.

இளங்கோவடிகள் எல்லாம் அறிந்தவர். அவரது உயர்ந்த எண்ணங்கள் ஒரு குறிக்கோள் காப்பியமாக மலர்ந்தன. கதைத்

தலைவன் ஒரு பெருநாட்டின் தலைநகரத்தில் அந்நாட்டு மன்னவனால் கொல்லப்படுவதன் மூலம் வினையின் பேராற்றல் உலகுக்குத் தெரியும் என்று நினைக்கின்றார். மேலும் கட்டுரை காதையில் மதுராபதித் தெய்வத்தால் உரைக்கப்படும் கோவலனின் பழம் பிறப்பிற்கும் பலர் அறிய இறக்கும் நகரச் சாவே பொருத்தமானதாகவும் அமைவதால் காட்டில் கோவலனுக்குப் பாதுகாப்புத் தரும் ஈரநெஞ்சமுடையவராக இருக்கிறார். அடிகளின் அன்பு நெஞ்சத்தால்தான் கொலைக்களக் காதையில் ஆய்ச்சியர் வாழிடத்தில் செம்மண் குடிசையில் இருந்த இருநிதிக்கிழவன் மகன் கோலவனும் மாகவான் நிகர் வண்மை மா நாய்கன் மகள் கண்ணகியும் எளிய குடித்தனம் நடத்தி இருவரும் உரையாடும் இனிய காட்சியயைக் காணமுடிகிறது. மேலேகண்ட இடங்களில் கோவலன் கொல்லப்பட்டிருப்பின் நெடுஞ்செழியனைவிட இளங்கோவடிகள் சில ஆய்வாளர்களால் சாடப்பட்டிருக்கலாம். திட்டமிட்டுக் காப்பியத்தை எழுதிச் செல்லும் இளங்கோவடிகள் உலகப் பெருங்காப்பிய ஆசிரியர்களின் வரிசையில் பேரிடம் பெறுகின்றார்.

ஞாயிறு ஒளிகளுள் உயர்ந்தது! இளங்கோவடிகள் புலமை புலமையில் உயர்ந்தது!

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 15, இதழ் 10-ன் தொடர்ச்சி]

## II

### THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

50. வேதமோதிலென்சாத்திரங்கேட்கிலெ
னீதிநூல்பலநித்தல்பயிற்றிலெ
னோதியங்கமோராறுமுணரிலெ
னீசனையுள்குவார்க்கன்றியில்லையே.

50. Why chant the Vedas, hear the Sastras' lore?
Why daily teach the books of righteousness?
Why the Vedangas six say o'er and o'er?
Release is theirs, and theirs alone, whose heart
From thinking of its Lord shall ne'er depart.

---

(தொடரும்)

---

# திருவருட்பயன் — தெளிவுரை

பண்டித வித்துவான், சைவப் புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்,

---

(மலர் 15. இதழ் 10-ன் தொடர்ச்சி)

86. ஆராதி ஆதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேலோதும் பற்று.

(தெ-ரை) சிகரத்தை முன்வைத்து ஓதும் திருவைந்தெழுத்தினையே தமக்கு ஆதாரமாகக் கொள்க; அதுவே தியானத்திற்குரியதாகும். அதுவே ஏனைய உலகியற் பொருள்களில் செல்லும் பற்றுள்ளத்தை அங்ஙனம் செல்லாது தடுக்க வல்லதாகும். இவ் அருமையெல்லாம் அமைந்த சிகர முதலான திருவைந்தெழுத்தினை ஓதாது, நகரத்தை முன்னே வைத்து ஓதும் பற்றுள்ளம் எற்றுக்கு? அந்தோ! இதுவே ஓதத்தக்கதாகும் என்பதாம்.

அந்தோ! என்பது சிகர முதலாக வைத்து ஓதும் திருவைந்தெழுத்தின் அருமை இதுவாகவும், அதனை ஓதாது இருப்பது வருந்தத்தக்கது என்னும் இரக்கம் தோன்ற நின்றது.

87. சிவம்முதலே ஆமாறு சேருமேல் தீரும்
பவம்இதுநீ ஓதும் படி

(தெ-ரை) சிகரத்தை முதலாக வைத்து ஓதும் திருவைந்தெழுத்தை ஓதின் அதுவே பிறவிப்பிணியை நீக்கவல்ல மருந்தாகும். முத்தியை விரும்புவோர் ஓதும் முறைமையும் இதுவாகும்.

படி - முறைமை.

88. வாசி யருளியவை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமாம் அங்கு.

(தெ-ரை) வகரமாகிய திருவருள் யகரமாகிய உயிரைச் சிகரமாகிய சிவத்தை அடையப்பண்ணி, அதனைப் பேரின்பத்தில் திளைக்கச் செய்யும். அத்திருவருளே சிவத்தின் உருவமாகும் என்பதாம்.

"மாய நட்டோரையும் மாயா மலமெனும் மாதரையும்
வீய விட்டோடி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயு டன்சென்று பின்தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து
ஏயு மதேநிட்டை என்றூர் எழிற்கச்சி ஏகம்பனே'

என்னும் பட்டினத்தடிகள் வாக்கும் ஈண்டு நினைவு கூர்தற்குரிய தாகும்.

'வாசி யருளியதை' எனப் பாடங் கொண்டு அதை - அந்த ஆன்மாவை எனப் பொருள் கொள்வாரும்* உளர்.

89 ஆசில்நவா நாப்பண் அடையா(து) அருளினுல்
வாசியிடை நிற்கை வழக்கு.

(தெ - ரை) குற்றந் தீர்ந்த நகரத்திற்கும், திருவருளாகிய வகரத்திற்கும் நடுவில் நில்லாது திருவருளினுல் திருவருட்கும் சிவத்திற்கும் இடையில் நிற்பது முறைமையாகும் என்பதாகும்.

'சிவாய நம' என்பதனுள் யகரம் வகரத்திற்கும் நகரத் திற்கும் இடை நிற்கின்றது. அங்ஙனமன்றி சிகரத்திற்கும் வகரத்திற்கும் இடைநிற்றல் வேண்டும் என்பது இதன் கருத் தாகும். இவ்வுண்மையை நூலறிவாலன்றிக் குரு முகத்தால் கேட்டலே தக்கதாம்.

மறைப்பாற்றலைக் குறிப்பது நகரமாகும். அது இறை வனது ஐந்தொழிலில் ஒன்ருதலானும், அதுதானும் உயிர் வீடு பெறற்குக் காரணமாய் நிற்றலானும், அதனை 'ஆசில் ந' என்ருர். அழிப்பு இளைப்பாற்றல்' (சித்தியார் - 57) என்னும் திருப்பாடலால் இவ்வுண்மை நன்கு விளங்கும்.

* கு. சிவபாத சுந்தரம்,

இங்ஙனமன்றி ஆசின ஆ எனப் பிரித்து குற்றத்தைப் பொருந்தின நகாரத்திலும், மகாரத்திலும் பொருந்தாமல் எனப்பொருள் உரைப்பாரும் § உளர்.

90. எல்லா வகையும் இயம்பும் இவனகன்று
நில்லா வகையை நினைந்து.

(தெ-ரை) உயிர் திருவருளைவிட்டு நீங்கி நில்லாதவாறு எல்லா நூல்களும் அதற்காம் அறவுரைகளைச் சொல்லும் என்ப தாம்.

நூல்கள் அனைத்தும் ஒருமுகமாகக் கூறுவது உயிர்கள் திருவருள் வழி நின்று இன்புற வேண்டும் என்பதேயாகும் என்பது இதன் கருத்து ஆகும்.

———

(தொடரும்)

---

இராகம் : காம்போதி தாளம் : ஆதி

பல்லவி

வேறுதுணை காணேனே உலகினில்
ஆறுமுகனே குகனே உனையன்றி (வேறு)

அனுபல்லவி

பாருல கெங்கிலும் பரிந்து அருள்செய்ய
சீரும் சிறப்பும் கொண்ட செல்வனே குமரனே (வேறு)

சரணங்கள்

1) வையக வாழ்வினில் உழன்று மதிமயங்கி
செயலொன் றறியாமல் திகைத்திடும் எந்தனுக்கு
தையல்வள்ளி மருவும் தயாளனே வேலவனே
மெய்யான நிலைகாண பரமபதம் கொடுக்க (வேறு)

2) குன்றம் குடிகொண்டிடும் குமரனே அருள்வேலா
மன்றம் ஆடிடும்ஐயன் சிவனார்பெற்ற பாலா
பொன்னியாம் குறத்தியை மணம்புரிந்த சீலா
அன்புடன் ஆதரித்து அருள்அபயம் கொடுக்க (வேறு)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி–3.

---

§ தே. ஆ. சீனிவாசன்.

# சுந்தர மூர்த்தி சுவாமிகளின்
# அற்புதத் திருப்பதிகங்கள்
## Hymns of St. Sundarar

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,
தமிழ் விரிவுரையாளர்,
காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.

---

The old man's claim was that Sundarar was a slave of his, according to an old agreement entered by him with the latter's grandfather. Sundarar was enraged and rebuked the old man. He asked; "Are you mad? Is it possible that a Brahmin could be a slave of another Brahmin?" Then the old man produced a palm-leaf document, signed by Sundarar's grandfather. Sundarar, in his anger, snatched it from him and tore it off. The old man began arguing and the people who had assembled for the marriage, enquired him of his native place. He said he was from Triuvennai Nallur. Then at the instance of Sundarar all of them adjourned to that place to find out the truth. There in the presence of the Elders of the village the old man produced another cadjan leaf saying that was the original document and the one which was torn to pieces by Sundarar was only the copy of it. The Elders read out the document and compared the signature found on it with the other available documrents which were signed by Sundarar's grandfather. Their verdict was that Sundarar had to serve the old man. Sundarar had no choice now. The Elders wanted to know the residence of the old man. He led them to the local temple and disappeared. Sundarar entered the shrine and had the vision of Lord Siva and

Parvati. Then Lord Siva told Sundarar. "Now you have been saved. As you have entered into a dispute with me, you shall be called Van-Tondar (a tough devotee). The best way to worship me is to sing about me." Sundarar pleaded his inablity to sing. The Lord said : "You Called me a 'mad one.' Begin with that". Sundarar was inspired and there came out the first hymn of the Seventh Book (Triumurai), "Pittha Pirai Soodi,"

திருவெண்ணெய்நல்லூர். பண் : இந்தளம்

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறை
அத்தாஉனக் காளாயினி அல்லேன்என லாமே. [யுள்

Oh, the Mad one, Thou hast crowned Thy head with moon. I Worship Thee in my mind without ever forgetting. Thou liveth in the temple, Arul-turai, at Vennainallur on the southern bank of the Pennai river. Oh, my Father, I have become Thine; how can I Say 'no' to Thee ! " (To be Contiuned)

# திரு இடையாறு

தேவாரமணி, திரு. சட்டையப்பன் அவர்கள்.
திருப்பனந்தாள்.



இடையாறு என்ற இத்தலம் நடுநாட்டுத் தலங்களான இருபத்திரண்டில் பதிமூன்ருவது தலமாக விளங்குகின்றது. பெண்ணையாற்றையும், மலட்டாற்றையும் கடந்து இத்தலத்தை யடைய வேண்டியதால் இத்தலம் 'இடையாறு' எனப் பெயர் பெறுகின்றது. இத்தலத்திலுள்ள கோயிலுக்கு 'மருதந்துறை' என்பது பெயராகும். இத்தலம் திருவெண்ணெ நல்லூர் ரோடு என்ற புகை வண்டி நிலயத்துக்கு வடமேற்காக மூன்ருவது கல்லில் உள்ளது. தல விருட்சமானது மருதமரம். இறைவன் இடையாற்றுநாதராகவும், அம்மை சிற்றிடை நாயகியாகவும் இருந்து அருள் வழங்குகின்றனர்.

இத்தலத்தை வணங்கிப் பாடிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'முந்தையூர் முதுகுன்றம்' எனத்துவங்கி ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'இடையாறிடை மருதே' என்று குறிப்பிட்டுச் செல்கின்ருர் அதிலே,

" திங்களூர் திருவா திரையான் பட்டினமூர்
நங்களூர் நறையூர் நனிநாலிசை நாலூர்
தங்களூர் தமிழா னென்று பாவிக்க வல்ல
எங்களூர் எய்தமான் இடையாறிடை மருதே"

என்ற பாடல் ஒன்று.

இந்திரன் முதலிய தேவர்களும், எண்ணிறைந்த முனிவர்களும், தூய அறிவரும், பெரும்பூத கணங்களும் எப்பொழுதும் அன்புடன் போற்றி வாழுகின்ற இடம் வெள்ளிமால் வரை; இந்தக் கயிலாயத்திலே கற்பனையும் காரணமும் காரியமும்

கடந்த கண்ணுதற் பெருமானுகிய சிவபெருமான் உமையம் மைக்குச்சிவ ரகசியத்தை உபதேசிக்கிருர். இந்த ரகசியப் பொருளைக் கிளி உருவில் இருக்கும் ஒரு முனிவர் கேட்டுக் கொண்டிருக்கிருர். இதை அறிந்த உமையம்மை அந்த முனி வரைப் பூவுலகில் பிறக்குமாறு சாபம் இடுகின்ருர்.

பிறவா யாக்கைப் பெரியோனிடம் பிறப்பினுல் உண்டாகும் பேதமைகளைக் கூறிப் புலம்புகின்ருர் முனிவர்; விமோசனம் கிடைக்க வழி கேட்கிருர். கருணைக்கடலாகிய சிவபெருமானும் அம்முனிவரது வேண்டுகோளுக்கு இரங்கி அவரைப் பூவுலகிலே வியாசருக்கு மகவாகப் பிறக்கவும், திருமருதந்துறை என்கின்ற திருஇடையாற்றுத் தலத்திலே மருத மரத்தினடியில் தவம் செய்து வருமாறும் ஆணையிடுகின்ருர்.

கிளி முகத்துடன் இருந்து அம்முனிவர் பிரம்மத்தை உணர்ந்தமையால் அவருக்கு 'சுகப்பிரம்ம ரிஷி' என்ற பெயர் அமைவதாயிற்று. 'சுகம்' என்பதன் பொருள் 'கிளி' யென்ப தாகும்;

சந்தானகுரவர் நால்வர்; மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியார், மறை ஞானசம்பந்தர், உமாபதி சிவாசாரியார் என்பர்வர்களே அவர்கள். இந்நால்வருள் மூன்ருமவரான மறை ஞானசம்பந்தர், இத்தலத்தில் (இடையாற்றில்) அவதரித்தவர்; இத்தலத்துப் பொல்லாப்பிள்ளையார் அருளும், அருணந்தி சிவா சாரியாருடைய அருளும் பெற்ற மறை ஞான சம்பந்தர் சிவ ஞான தந்தை மெய்கண்டார் தோற்றப்பதியான பெண்ணுகடம் சென்று வாழ்ந்தவர். இவருக்கு மருதை மறை ஞான சம்பந்தர் என்றும், கடந்தை மறை ஞானசம்பந்தர் என்றும் இரண்டு பெயர்கள் உண்டு. பெண்ணுகடம் என்ற ஊருக்குக் 'கடந்தை' என்னும் மற்ருெரு பெயருண்டு. இதை.

"கடந்தைத் தடங் கோயில் சேர்
தூங் கானை மாடம்"

என்று திருஞானசம்பந்தரும்,

"துன்னூர் கடந்தையுள் தூங்கானை மாடம்" என்று திருநாவுக்கரசரும் திருமுறைகளில் கூறுகின்றனர். பெண்ணாகடம் என்பது தலம்; அத்தலத்துக் கோயில் தூங்கானைமாடம். ஆகவே பெண்ணாகடத்தில் வாழ்ந்த காரணம் பற்றிக் கடந்தை மறை ஞானசம்பந்தரானார்; இடையாற்று மருதூரில் அவர் தோன்றியதால் மருதை மறை ஞானசம்பந்தரானார். இதை,

"திருவளரும் சாமமறைதிகழ் பராசரன் மரபோன்
விரசுனர்பால் மறையுணர்வு விரிந்தொளிரப் புணர்த்துவோன்
மருதமொடு கடந்தையை ஆள்மறை ஞானசம்பந்த
குருமணிதன் மருமலர்த்தாள் குறித்துருகிப் பரசிடுவாம்."

என்ற பாடல் நன்கு தெளிவிக்கிறது. இடையாற்று விநாயகர், மருதைப்பிள்ளையார், ஞானசம்பந்தப் பிள்ளையார் என்ற பெயரில் வயல் வெளியில் கோயில் கொண்டு விளங்குகின்றார். மறை ஞானசம்பந்தருக்கு அருள்செய்த பிள்ளையார் ஆனதால் ஞானசம்பந்தப் பிள்ளையாரானார் இவர். இவரை மருதகணபதி, பொல்லாப் பிள்ளையார் என்று கல்வெட்டுக் குறிக்கும்.

மறை ஞானசம்பந்தர் பராசர கோத்திரத்திலே, அந்தணர் குலத்திலே அவதாரம் ஆனவர். அருணந்தி சிவாசாரியாரது திருவருளுக்குப் பாத்திரரான பின்பு இவரது மனம் தில்லையம் பதியை நாடிற்று. சிதம்பரத்தில் நடராசப் பெருமானது ஆலய மேலைத் திருக்கோபுரத்திலே யுள்ளதோர் குகையிலே சிவநிட்டை கூடியிருப்பார். வடமொழியிலே மிகுந்த பாண்டித்தியம் பெற்ற இவர் ஒரு நாள்!-மத்தியான வேளை ஒரு வீட்டு வாயிலில் 'கூழ்' அருந்தியபடி இருக்கிறார். நடராசப் பெருமானுக்கு உச்சிக்கால பூசை நடந்த நேரம் ஆனதால் அப்பூசையை முடித்துக்கொண்டு தில்லைவாழந்தண (தீட்சித)ரில் ஒருவரான உமாபதிசிவம் என்னும் பெரியார் பல்லக்கில் வந்து கொண்டிருக்கிறார். அவரின் வருகையைக் கொட்டு மேளம் - கைதிவர்த்தி முதலியன முன் அறிவிப்பை யளிக்கின்றன. மறை ஞானசம்பந்தருக்குக் கூழ் வார்த்துக் கொண்டிருந்தவர் ஓர் அம்மையார்; அவர் கூழ்வார்ப்பதை நிறுத்திவிட்டுத் தெருவிலே கோலாகலமாக வந்துகொண்டிருக்கும் உமாபதி சிவத்தின் பல்லக்கையும், அதை ஒட்டி

வந்துகொண்டிருக்கின்ற எடுபிடிகளையும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். பல்லக்கும் அந்த வீட்டுவாயிற் பக்கம் வந்து சேர்கின்றது. மறைஞானசம்பந்தர் இந்த சமயம் "ஏன் அம்மா! பட்டகட்டையில் பகற்குருடு செல்வதையா பார்த்துக்கொண் டிருக்கிறீர்கள்!" என்று அந்த அம்மையிடம் கேட்டார். இது உமாபதிசிவத்தின் காதில் 'பளிச்'சென்று விழுந்துவிட்டது. இதுவே அவருக்கு ஞான உபதேசமாகிவிட்டது. பல்லக்கி லிருந்து கீழே குதித்து ஓடிவந்தார் மறைஞானசம்பந்தரிடம் அந்த அம்மையார் வார்க்கின்ற கூழை இரண்டு கைகளால் வாங்கி அருந்திக் கொண்டிருந்த மறைஞானசம்பந்தரது முழங்கை வழியாகவும் அந்தக்கூழ் ஒழுகிற்று. அதை வாங்கி உமாபதி சிவம் குடிக்கலானுர்.

உமாபதிசிவத்தின் அதிதீவிரமான பக்குவமான நிலையினை உணர்ந்த மறைஞானசம்பந்தர் தமக்குக் கிடைத்துள்ள குருபரம் பரை சிவஞான போதத்தினை உபதேசம் செய்தார். அவ்வுபதேச விளைவால் வினைமாசகன்று வியனுலகுக்கு ஞான ஒளி யீட்டும் குரவரானுர் உமாபதி சிவாசாரியார். இப்படிப் பரிபாகமுற்ற பலருக்குச் சிவஞான ஒளி நெறியைக் காட்டிய குருமூர்த்தி யாகிய மறைஞானசம்பந்தர் தில்லைக்கு மேல்பால் விளங்கும் திருக்களாஞ்சேரியில் பிரமபுரீசர் திருமுன் சிவானந்த நிட்டை கூடினுர். இவர் சிந்தாந்தப் பேரின்பப் பெருவாழ்வு எய்திய நாள் ஆவணி மாதம் உத்திர நன்னுளாகும். சிவயோகமே சிறந்த முத்தி நெறியெனும் நிலையதனை இவ்வுலகுக்குக் காட்டிய இப்பெரியாரது வரலாறு வாழ்வாங்கு வாழ்மக்களுக்கு ஓர் வழி காட்டுவதாகும்.

முற்றும்.



உ

SIVA SIVA

# Maha Sivaratri Festival Thevara Goshti Nithi at Kalahasti

## CAPITAL RS. 10,000/-

Coming out alive from a burning kiln
Cowing down an incited royal elephant,
Eating poisoned food which did no harm,
Floating on a stone boulder using it as a float,
Bringing back life to the dead son of Appoothi,
Opening the shut doors of the Vedaranyam Temple
Plunging in a lake at Kailas and rising up from a tank at Tiruvaiyaru,

These are the miracles wrought by Tirunavukkarasar,

Turning barren land fertile at Tirunanipalli,

Obtaining Talams by the Divine grace at Tirukkolakka, and Palanquin, Umbrella, and Horn at Tirunelvayil,

Curing Kollimazhavan's daughter of Muyalagan at Pachil-Achiramam,

Receiving a canopy of pearls at Tiruppatteeswaram,

Bestowed with a purse of 1000 gold coins at Tiruvavaduthurai for his father's yaga performance,

Bringing back life to a merchant stung-by a cobra,

Closing the doors of the Vedaranyam temple by improvising a quatrain,

Curing the fever of the Pandyan King by besmearing holy ashes,

Showing a palm leaf inscribed with a Pathigam unburnt, and making another to go up the current in Vaigai at Madurai,

Causing a boat to sail across the flooded river at Tirukkollampoothur,

Turning male palmyra tree into a female one at Tiruvoththoor,

Bringing out preserved bones into the form of a virgin girl at Mylapore

**These are the miracles performed by Tirugnanasambandar.**

Causing demons to carry mounts of paddy from Kundaiyur to Tiru Arur,

Transforming bricks into gold at Tiruppugalur,

Getting back the sight lost at Tiruvotriyur,

Sending Lord Siva as mediator to pacify the wrath of Paravaiyar at Tiru Arur.

Throwing gold bars at Vriththachalam and causing them to appear in the tank at Tiru Aroor,

Obtaining back the articles robbed away at Tirumuruganpoondi,

Bringing back to life a boy devoured by a crocodile at Avanasi,

Departing for Mount Kailas on a white Elephant accompanied by Cheraman

**These are the miracles accomplished by Sundarar:**

These remarkable events were performed by the Saiva Saints as they improvised the soul stirring

Thevarams and these Thevaram Hymns inspire piety and devotion to Lord Siva. To propagate the divine Thevaram Hymns by conducting a Thevara Goshti during the Maha Sivaratri festival at Kalahasti which is one of the Siva Shrines sanctified by these three great Saiva Saints, which got its name as Sri (Spider) Kala (Cobra) and Hasti (Elephant) worshipped Lord Siva, which is one of the Pancha Bhoota Kshetras having Vayulinga and where Kannappa Nayanar, one of the 63 Saiva Saints, whose devotion to God is unequivocal attained beatitude in six days, - this endowment is created by His Holiness **Sri-La-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal**, Head of Sri Kasimutt, Tirupanandal (Madras State). This endowment shall be styled **"Maha " Siva Ratri Festival Thevara Goshti Nidhi at Kalahasti."**

2. This endowment consists of Goverment Securities to the face value of Rs 10,000/- invested in 3% Conversion Loan of 1946 feteching interest at 3% per annum, Government Promissory Notes bearing No. CA. 246752 for Rs. 5000/- CA.246756 for Rs. 2000/- CA. 246758 for Rs. 2000/- CA. 242275 for Rs. 500/- CA. 242276 for Rs. 500/- Total Rs. 10,000/. The administration of the fund shall vest in the Donor and his successors-in-interest.

3. (a) The annual interest derived from the endowed capital shall be utilised to conduct a Thevara Goshti i. e. to arrange singing of Thevarams by Thevaram Hymnists, on six important days during the annual Maha Sivaratri festival in the Siva Shrine at Kalahasti (Andhra Pradesh) according to the budget or Thittajaptha prepared by the Donor and his successers-in-interest each year which will depend upon the interest derived from the endowed fund.

3. (b) Similar endowments which have been created by the Donor to propagate Thevara Thirumurais are enumerated below:-

*A. Places where Othuvars (Hymnists) have been appointed and Thevaram is being sung daily :-*

| | | Capital Rs. |
|---|---|---|
| 1. | Sri Kumaragurupara Swamigal Memorial feeding etc. Charities, Tirumurai endowment at Benares | 4,00,000 |
| 2. | Tiru Kachi Ekamban Rudraksha Thevara Nidhi at Kancheepuram | 50,000 |
| 3. | Thevara Nidhi at Tiruvannamalai | 24,000 |
| 4. | Nambi Andar Nambi Memorial Thevara Nithi at Tirunaraiyur | 35,000 |
| 5. | Raja Raja Abhayakulasekara Chola Memorial Thevara Nithi at Chidambaram | 16,000 |
| 6. | Thevara Nithi at Madurai | 50,000 |
| 7. | Thevara Nithi at Tirukkutralam | 26,500 |
| 8. | Kanyakumari Achiramam etc. places feeding charity Tirumurai etc. Nithi at Suchindram | 2,50,000 |
| 9. | Agasthiyar Thevara Nithi at Papanasam (Tirunelveli District) | 25,000 |
| 10. | Thevara Nithi at Rameswaram | 51,000 |
| 11. | Kedara Yathirai Tirumurai etc. Nithi at Tiruchirapalli | 1,00,000 |
| 12. | Thevara Nithi at Kalahasti | 30,000 |
| 13. | Thevara Nithi at Kumbakonam | 30,000 |
| 14. | Thevara Nithi at Tiruvennainallur | 30,000 |
| 15. | Thevaram Endowment at New Delhi | 80 000 |
| 16. | Thevara Nithi at Vada Tiruvalangadu | 25,000 |
| 17. | Thevara Parayanam at Srivaikuntam annual expenditure Rs. 900 | |
| 18. | do. at Tiruvadigai do Rs. 900 | |

*B. Provision for Conducting Thevara Goshtis '(Recitals by Selected Hymnists for a day or more as Scheduled)*

| | |
|---|---|
| 1. (As per 7 above) Chitrai Vishu | Tirukkutralam |
| 2. (As per 8 above) Chitrai festival-three days Margalifestival-three days | Suchindram |
| 3 Vaikasi Amarapaksham Thrithiyai -throughout the night-Thevara Nithi at Madurai capital Rs. 25,500/- | Madurai |
| 4. Vaikasi Amarpaksham Thrithiyai-throughout the day - Akandaparayana Tirumurai Nidhi at Madurai Rs. 20,000/- | Madurai |
| 5. (As per 4 above) Vaikasi Punar Poosam-throughout the night | Tirunaraiyur |
| 6. Adi Swathi-throughout the night-Innisai Thevara Nidhi at Thillai Rs. 25,000/- | Chidambaram |
| 7. Avani Moolam - throughout the night-Sri Thayumanavisar Thevara Nithi Rs. 18,500/- | Tiruchirapalli |
| 8. Karthigai festival for ten days-Tirumurai Parayana Nithi during Karthigai festival Rs. 17,000/- | Tiruvannamalai |
| 9. Margali Thiruvadirai-recital of Tirupallandu on the car festival day-Pallandu Villakku Nithi at Thillai Rs. 5000/- | Chidambaram |
| 10. Thai Poosam-throughout the night-estimated expenditure R. 500/- | Tiruvidaimarudhur |
| 11. Panguni Uthiram festival-one day-throughout the night-Estimated expenditure Rs. 500/- | Tiru Arur |

12. Panguni Uthiram festival-one day-throughout the night-estimate Rs. 500/- Kancheepuram

*C. Publication of the Twelve Thirumurais:-* Rs.

Endowment at Srivaikuntam-landed property 50,000

| *D. Tirumurai Prizes to Pupils* | Endowed capital Rs. |
|---|---|
| 1. Maharaja of Travancore Thevaram Prize | 5,000 |
| 2. Cheraman Perumal Thevaram Prize at Cochin | 5,000 |
| 3. Three Great Saints Thevaram Prize at Sirkali, Tiruvaiyaru, Tiruvarur, Aduthurai and Tirupanandal | 10,000 |
| 4. Maharaja of Mysore Thevaram Prize | 5,000 |
| 5. Gurugnanasambandar memorial Thevaram Prize at Mayuram | 5,000 |
| 6. Kumaragurupara Swamigal memorial Thevaram Prize at Srivaikuntam | 5,000 |
| 7. Tirumalai Naickar memorial Thevaram Prize at Madurai | 10,000 |
| 8. Gurugnanasambandar memorial Thevaram Prize at Srivilliputhur | 3,500 |
| 9. Moovar Thevaram Prize at Kancheepuram | 5,000 |
| 10. Senthilandavan Thevaram Prize at Tiruchendur | 5,000 |
| 11. Tiruvachakam Prize at Thanjavur | 5,000 |
| 12. -do- Madurai | 5,000 |
| 13. -do- Chidambaram | 5,000 |
| 14. -do- Tiru Annamalai | 5,000 |

*E. Lectures on Thirumurais*

| | |
|---|---|
| 1. Tiruvachakam lectures at Chidambaram | 7,000 |
| 2. Periapuranam Lectures at -do- | 7,000 |
| 3. -do- at Madurai | 7,000 |

*F. Thevaram etc. Inscribed in Temples.*

| | |
|---|---|
| Tiruchendur | Tirunelveli |
| Tirukkutralam | Srivaikuntam |
| Madurai | Palani |
| Avinasi | Tiruchirapalli |
| Tiruvaiyaru | Kumbakonam |
| Swamimalai | Tiruvappady |
| Tiruloki | Tirupanandal |
| Tiru-Arur | Vedaranyam |
| Tiruvidaikkazhi | Tiruchchaykkadu |
| Tirumarugal | Tiruttelicheri |
| Tiruppungur | Vaithiswarankoil |
| Tirukkolakka | Sirkali |
| Chidambaram | Tiruvadigai |
| Tiruvennainallur | Tiru Annamalai |
| Tiru Oththoor | Tirukkazhukkundram |
| Kancheepuram | Vada Thiruvalangadu |
| Vada Tirumullaivayil | Mylapore |
| Srisailam | Varanasi |

Total Expenditure Rs. 50,000

4. The endowment shall not be diverted to any other purpose than the one stated above.

5. The Government securties when encashed shall be reinvested in Government Securities fetching a high rate of interest. The endowed capital shall be in the name of the Donor and his Successors-in-interest.

Tirupanandal,
Dated 6-3-1964. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvidamarudhur Sub-Registrar's office on 10-3-1964 as No. 24 of 1964 of Book 4, volume 50, pages 270 to 274.

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'

| எண் | நூல் | | ரூ | ந.பை |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | — | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. .. | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் .. | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 | 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலமட்டும்) | ... | 0 | 56 |
| 10* | திருமந்திரம் .. (புதிய பதிப்பு) | ... | 2 | 25 |
| 11* | பதினோராந்திருமுறை .. .. | ... | 1 | 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 | 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு (அச்சில்) | ... | | |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலமட்டும்) | ... | 3 | 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | ... | 1 | 25 |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 | 75 |
| 19 | கந்தபுராணம் - முதல் மூன்று காண்டங்கள் .. | ... | 2 | 75 |
| 20 | .. யுத்த தேவகாண்டம் .. | ... | 2 | 00 |
| 21 | .. தக்ஷகாண்டம் .. | ... | 1 | 50 |
| 22 | கந்தபுராண உரைநடை | ... | 3 | 00 |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 | 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா - ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 | 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் - உரையும் | ... | 0 | 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை - ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 06 |
| 30 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 31 | திருக்குறள் - பொருட்பால் .. | ... | 2 | 50 |
| 32 | திருக்குறள் - காமத்துப்பால் .. | ... | 1 | 00 |
| | ஆ 30, 31, 32 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |
| 33 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 | 75 |
| 34 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 | 13 |
| 35 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 | 75 |
| 36 | திருவசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 | 37 |

| | | |
|---|---|---|
| 37 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுடசியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | ... 2 75 |
| 38 | திருவாரூர் நான்மணிமாலை — முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 39 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 40 | பண்டார மும்மணிக் கோவை — காசிக் கலம்பகம் — சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 41 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 42 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 43 | பெரியபுராணம் — உரைநடை | ... 2 00 |
| 44 | திருவிளையாடற் புராணம் — உரைநடை | ... 2 25 |
| 45 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங் களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 46 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 47 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 48 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 49 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 50 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 51 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... 1 20 |
| 52 | அபிராமி அந்தாதி — தெளிவுரையுடன் | ... 0 50 |
| 53 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |
| 54 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | ... 0 35 |
| 55 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... 0 10 |
| 56 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... 0 10 |
| 57 | பழமொழித்திருமுறை | ... 0 25 |
| 58 | திருவாரூர் நான்மணிமாலை | ... 0 50 |
| 59 | Hymns and Proverbs | ... 0 30 |
| 60 | திருத்தொண்டர் புராணசாரம் | ... 0 40 |
| 61 | அப்பர்விழா வெளியீடு | ... 0 25 |
| 62 | நவக்கிரகமாண்பு | ... 0 25 |
| 63 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் | ... 0 30 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,

"நியோராஜ விலாசம்" 53, பின்னவர் தோப்புத்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 49, 50, 51) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.